# ஒரு ராத்தல் இறைச்சி

நகுலன்

என் பெயர் நவீனன். சென்ற 25 வருஷங்களாக எழுதி வருகிறேன். நான் எழுதியது ஒன்றாவது பிரசுரமாகவில்லை. அப்படிச் சொல்வதுகூடப் பிசகு. சுமார் 15 (கதை, குறுநாவல், கவிதை) பிரசுரமாகியிருக்கும். இவற்றில் 13க்கு ஒரு விதச் சன்மானமும் கிடைக்கவில்லை. 14வது கதைக்கு வந்த செக்கைக் கமிஷன் குறைத்துக் கையில் கிடைத்தது 4 ரூ.25 பைசா.

நான் ஒரு பெண்ணைக் காதலித்தேன். அவள் பெயர் சுசீலா. அவளுக்குக் கல்யாணம் நடந்தது. இப்பொழுது அவள் ஒரு தாயார். இதை நினைக்கும் பொழுதெல்லாம் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. இருந்தாலும் கல்யாணம் நடைபெறுவதும் குழந்தை பெறுவதும் சர்வ சாதாரண நிகழ்ச்சிகள் என்பது எனக்குத் தெரியாததில்லை.

நான் வேலை செய்துவரும் பாங்கில் எல்லோருக்கும் உத்தியோக உயர்வு எனக்கு முன்னரே ஏற்பட்டது எனக்கு ஒரு வருஷத்திற்கு முன்தான் உயர்வு கிடைத்தது அப்பொழுது விலைவாசியும் உயர்ந்தது.

என் உடன் பிறந்தவர்கள் அயலூரில் இருக்கிறார்கள் மூன்று வருஷங்களுக்கு முன் என் பெற்றோர்களும் ஒருவர் பின் ஒருவராக இறந்தனர்.



ஆனால், இதனால் ஒன்றும் நான் அசைந்து விடவில்லை. எனக்கு ஒருவிதக் கசப்பும் ஏற்படவில்லை.

ஆனால், கடைசியாக ராஜூ செய்ததுதான் மனதை விட்டு அகலவில்லை.

நான் கடந்த 5 வருஷமாக ஒரு நாய் வளர்த்து வந்தேன்.

அது ஒரு நாட்டு நாய். மங்கின செங்கல் வர்ணம்; வளையாத காதுகள்; குள்ளமும் இல்லை, உயரமும் இல்லை, நல்ல முரட்டுத் தேகம். அதற்கு நான் ராஜூ என்று பெயர் வைத்திருந்தேன். அதற்கு இப்பொழுது வயோதிகம் தட்டி விட்டது. இருந்தாலும் அது என்னிடம் அன்பாக இருந்தது. சில நாட்கள் நான் அதனுடன் பேசுவேன்.

''ராஜூ மகாலக்ஷ்மி தியேட்டரில் 'கைதி' வந்திருக்கிறது. பார்க்கலாமா? என்ன சொல்கிறாய்?''

அது படுத்துக்கொண்டே வாலையாட்டும்.

''ராஜூ, அவன் இப்படிச் செய்வான் என்று நான் நினைக்கவில்லை.''

அது எழுந்து முன் கால்களை நீட்டிச் சோம்பல் முறிக்கும்.

''ராஜூ, உனக்குக் கதை பிடிக்குமா, குறுநாவல் பிடிக்குமா?''

அது என்னைப் பார்த்துக்கொண்டே படுத்துக்கொண்டிருக்கும்.

ஜுரத்தில் நான் படுத்துக் கொண்டிருந்தால் என்னை விட்டு ஒரு அடி நகராது.

அப்படி ஒரு தடவை நான் அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கையில் என் காலில் என்னவோ வழவழ வென்று ஊர்வது மாதிரி ஓர் உணர்ச்சி. நான் பயந்து சத்தம் வெளிவராத நிலையில் கண்ணைத் திறந்தபொழுது ராஜு என் காலை நக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன்.

ஒரு நிமிஷம் நான் அசடாகி விட்டேன் என்றே சொல்ல வேண்டும்.

ஆனால் இவ்வளவு அன்புள்ள ராஜு எனக்கு வெள்ளிக் கிழமை தோறும் ஒரு பெருஞ் சோதனையாகி விட்டது என்றே சொல்ல வேண்டும்.

வெள்ளிக்கிழமை தோறும் வேலைக்காரன் அதற்கு இறைச்சி வாங்கி வருவான்.

அதை அவன் பாகமாக்கிக் கொடுக்க 12-30 மணி ஆகும். எனக்குக் காப்பி கொடுத்துவிட்டு அவன் இறைச்சி வாங்கப் புறப்படுவான்.

ஆனால் ராஜு 11-30 மணிக்கே என் அறைக்கு வந்து விடும்.

என்னைப் பார்த்துவிட்டு சமையல் அறைப்பக்கம் வேலைக்காரன் இருக்கும் இடத்திற்கு ஓடும். பிறகு என்னிடம் வரும்; பிறகு அவனிடம் போகும். நான் அதட்டுவேன்.

ஓர் அரை நாழிகை அடங்கிக் கிடக்கும். பிறகு என்னைப் பார்த்துவிட்டு என் முகபாவம் சரியாக இருந்தால், சமையல் அறைப்பக்கம் பார்க்கும். பிறகு மெள்ள எழுந்திருக்கும். நான் ஒன்றும் சொல்லா விட்டால் பழைய பல்லவி. அதற்கு இறைச்சி வருவதற்குமுன் எனக்குக் காபி வரும்.

அது என்னையே பார்த்துக் கொண்டிருக்கும்.



"உங்க மனித ஜாதியே இப்படித்தான். எதிரில் ஒரு நாலுகால் மிருகம் பட்டினி கிடப்பது மறந்துவிடும். உங்களுக்கு இரண்டு கால்தான். இருந்தாலும் நீங்கள்தான் பிரதானம் என்ற திமிர்" என்று சொல்வதுபோல் இருக்கும். நான் கவனிக்கமாட்டேன்.

ஆனால், வேலைக்காரன் இறைச்சி வாங்க என்னிடம் காசு கேட்க வருவான்.

அப்பொழுது நீங்கள் ராஜுவைப் பார்க்க வேண்டும். திடீரென்று அறை முழுவதும் தலை தெறிக்க ஓடும். என் இரண்டு கால்களின் நடுவில் நுழைந்து என் கால்களை உரசிக் கொண்டு, என் காலை நக்கிக் கொடுக்கும்.

நான் எவ்வளவோ தடவை கண்டித்தும், அடித்தும் அதன் இந்தப் பழக்கத்தை மாற்ற முடியவில்லை.

"நீ ஏன் என்னை அடிக்கிறாய்? நீ இறைச்சி வாங்கித் தருவதற்கென்றா நான் இதைச் செய்கிறேன்? நானோ நாய் ஜென்மம்; மனிதன் காலை நக்குவதில் அதுவும் உன்னைப் போல தயை காட்டுபவர்களின் காலை நக்கு வதில் எங்களுக்கு ஒரு தனி ருசி. நீ இதைப் புரிந்து கொள்ள வேண்டும்" என்று சொல்வதுபோல் இருக்கும்.

அதன் சுபாவத்தை என்னால் மாற்ற முடியவில்லை. அதனால் நான் வெள்ளிக்கிழமை தோறும் வீட்டிலிருக்கும் போதுகூடக் கான்வாஸ் ஷூஸ் அணிந்து கொள்வது வழக்கமாகி விட்டது. ராஜு அதைப் பொருட்படுத்த வில்லை. செருப்பை நக்குவதில் அதற்குப் பன்மடங்கு உற்சாகம்! என் நண்பர்கள்கூட "ஏதாவது சரும வியாதி பிடித்துவிட்டதா?" என்று கேட்டார்கள். நான் அவர்களிடம் என்ன சொல்வது? "வெள்ளிக்கிழமை தோறும் 12 மணிக்கு இறைச்சி கிடைக்கும் என்பதால் என்

ராஜு என் காலை நக்கித் தின்கிறது!'' என்று சொல்ல முடியுமா? நான் சிரிப்பேன்.

ஆனால், 10 நாட்கள் முன்பு நடந்த சம்பவம்தான் என்னை அசைத்து விட்டது.

அன்றும் ஒரு வெள்ளிக்கிழமை.

பாம்பேயிலிருந்து என்னைக் காண்பதற்குப் பிரசித்த எழுத்தாளர் என்.எஸ். கானேகர் வருவதாக எழுதி யிருந்தார்.

இத்தனைக்கும் அவர் என்னை ஸ்டேஷனுக்கு வரக்கூட எழுதவில்லை; நான் போகவுமில்லை.

அவராகத்தான் வீடு தேடி வந்தார்.

நான் அவருக்கு ஹோட்டலில் அறை எடுத்துக் கொடுக்கவில்லை.

அவருடன் சேர்ந்து போட்டோ எடுத்துக்கொள்ள வில்லை.

ஏன், முதல்நாள் அவர் நண்பர் ஒருவர் வீட்டில் சாப்பிட்டார் என்பதால் அடுத்த நாள் என் வீட்டில் வலுக்கட்டாயமாகச் சாப்பிடவும் செய்யவில்லை.

ஆனாலும் அவர் என்னைப் பார்க்க வந்திருந்தார். வெகு காலமாக எங்கள் இருவருக்கும் இலக்கியம் மூலம் ஒரு பிணைப்பு. ஒவ்வொரு சமயம் என்னிடம், ''என்னை விட நீ நன்றாக எழுதுகிறாய்'' என்று சொல்லியிருக்கிறார்.

எனக்கு அவர் என்னை உற்சாகப்படுத்த அப்படிச் சொல்கிறார் என்பது தெரியும். இல்லாவிட்டாலும் எங்களிருவரிடையும் நீ பெரியவன் - நான் சின்னவன் என்ற சின்னத்தனமான பாவம் என்றுமே இருந்த தில்லை.



அப்படிப்பட்டவரிடம் நான் வெள்ளிக்கிழமை என்பதையும் மறந்து பேசிக் கொண்டிருந்தேன். ராஜு சற்று நேரம் அவரையே பார்த்துக் கொண்டிருந்தது. பிறகு சமையல் அறைப்பக்கம் சென்றது. மீண்டும் என்னருகில் வந்தது. மீண்டும் வாசல் திண்ணைக்குச் சென்றது. மீண்டும் என்னிடம் வந்தது.

''இவருடன் ஏன் சமயத்தை வியர்த்தமாக்குகின்றாய்? ஏதாவது இறைச்சி கிடைக்குமோ?'' என்று கேட்பது போல் இருந்தது.

திடீரென்று அது வாசல் திண்ணையில் இருந்த காக்கையைத் துரத்திச் சென்றது.

கானேகர் என்னிடம், ''உன் நாய் ஏன் ஒரு மாதிரி இருக்கிறது?'' என்று கேட்டார்.

நான் ''ஒன்றுமில்லை'' என்றேன். அப்படி இல்லாமல் நான் அவரிடம் 'என் செருப்பை நக்கச் சமயம் கிடைக்காததால் அதற்குப் ''பைத்தியம்'' பிடித்திருக்கிறது' என்று சொல்ல முடியுமா?

மணி 12 அடித்தபொழுது கானேகர், ''வா, வெளியில் போய்ச் சாப்பிடலாம்'' என்றார்.

அப்பொழுதுதான் ராஜு ஓடிவந்து என் காலின் ஆடு சதையைக் கடித்தது. கானேகர் ஆடிவிட்டார். அவர் ''முதலில் நாயைப் பிடித்துக் கட்டு'' என்றார். ஆனால் ராஜு நான் அதட்டினவுடன் அடங்கிவிட்டது. வேலைக் காரன் அதைக் கட்டினான்.

கானேகர் ஸ்டேஷனில் ஊருக்குத் திரும்பும்முன் என்னுடன் டாக்டரிடம் வந்தார். டாக்டர் பயப்படுவதற்கு ஒன்றும் இல்லை என்றார். கானேகர் ரயிலில் ஏறினதும்

(நான் ராஜூ என்னைக் கடித்ததும், அதன் பரபரப்பின் காரணத்தைச் சொல்லியிருந்தேன்) சிரித்துக் கொண்டே "நாய்க்கு ஒரு ராத்தல் இறைச்சி என்றால் இவ்வளவு சபலமா!" என்று கேட்டது ஞாபகத்திற்கு வருகிறது.

பத்து நாட்களுக்குப் பிறகு என் வேலைக்காரன் ராஜூவைக் கார்ப்பரேஷன் நாய் பிடிக்கிறவனிடம் சேர்த்த பொழுது எனக்குச் சற்று வருத்தமாகத்தான் இருந்தது. ஏனென்றால் அது செய்தது அவ்வளவு பெரிய குற்றமாக எனக்குப் படவில்லை. ஆனால், நான் வேலைக்காரனைத் தடுக்கவில்லை. ஏனென்றால் அது கடித்ததைவிட அது வாரந் தவறாமல் என்காலை நக்கினதுதான் எனக்குச் சகிக்க முடியவில்லை!

(செப்டம்பர் 1968)